அவ்வரியினம்போலுய்யுமறனெடுஞ்சிரத்தைசெல்லுஞ்
செவ்வழிப்படர்ந்தாளன்னசெயலெலாமுணர்ந்துபின்ன
ருய்வழிபிறிதொன்றின்றியுற்றவாறுன்பாலோதற்
கிவ்வழிபுகுந்தோம்யாங்களென்செய்தக்கதென்றான். (சசு)

அதுபுகன்றவன்சொற்கேட்டவரசனுந்துணுக்கிட்டஞ்சி
மதுநுகர்கபாலன்றன்னைவாண்முகமெடுத்துநோக்கிக்
கதுமெனகின்பானின்றகடுந்திறலணங்கைமற்றோர்
பொதுமகடனக்காயேவிப்போக்கினைகொல்லோவென்றான். (சஎ)

அலங்கலம்புயவிவேகிற்கரிசிவபத்திபோலக்
குலங்களோடிங்குகாக்குங்கோற்றொடியனுமன்றன்று
விலங்கைமாகாளிமுன்னுளேகியதென்னநம்மை
விலங்கினள்கொல்லோவென்னுவிறற்கவுடேசன்சொன்னான் (சஅ)

பின்னருமற்றுளோருஞ்பெருநிதியிழந்தோரொன்ன
வன்னவட்கிரங்கிநிற்குமளவையிலதிமாமோக
மன்னவன்வதனநோக்கிவயங்குமப்படைகட்கெல்லா
முன்னவன்காமராசனினையனமொழிவதானான். (சகூ)

வாயுவின்றிறலான்மேனுள்வையகந்தாங்குமேரு
வாயிரமுடியின்மற்றொன்றகன்றிடவதனின்வன்மை
போயினதாகுங்கொல்லோவத்தகைபோழ்கபாலி
யேயினளிறந்தறன்னுனம்வலிக்கிறொன்றுண்டோ. (ருo)

அடியனேனிருக்கவண்டரண்டங்கண்முழுதும்வெல்லுங்
கொடியவன்கலகனோடுகோபனுமிருக்கப்பின்னு
மடிவிலாங்காரனுந்தன்மகனுலோபனுமிருக்கக்
கடியமாமதன்மானன்சங்கற்பனுமிருக்கமாதோ. (ருக)

மச்சரன்முதலோர்பின்னுமன்னநீபணிக்குமேவ
லச்சரவேகம்போற்சென்றரிபிரமாதியோரும்
பிச்சரதியற்கைசெய்யப்பிடித்ததுமுடிக்கவல்ல
விச்சையரிருக்கநின்னைவெல்பவருலகில்யாரோ. (ருஉ)

இருடிரண்டனையமற்றுனெண்ணிலாப்படைஞர்தம்மு
ளொருவரோபோதாதோதானுலகொருமூன்றும்வென்று
வருவதற்கனையர்நிற்கமற்றெளியேனையேனுந்
திருவருள்புரியின்றேசிரத்தைபோய்வருமுன்சென்றே. (ருங)

ஓங்கியவிவேகனார்க்கவ்வுபநிடத்தொருத்திவேட்கை
யாங்குறுவண்ணமாற்றியரிசிவபத்தியன்பு
நீங்குறவிலக்கிமற்றைநீலவாள்விழியார்வேட்கை
பூங்கணையொன்றேயெய்விப்புந்தியிற்புணர்ப்பமன்றே. (ருச)

விடைதருகென்றுநின்றவிராவிற்காமன்றன்னைப்
புடைஞர்மற்றுள்ளோரோடும்படர்ந்திவைசெய்தியென்னாக்
கொடைகெழுமோகவேந்தன்கூறினன்விடுக்குமெல்லைத்
தடையறப்புகுந்துதாழ்ந்தோர்சாரன்வந்திவையசொன்னான். (ருரு)

இன்றினிச்செல்வதென்னையெகியசிரத்தைதடீண்டு
நன்றறிவிவேகவேந்தைநான்முகன்மகள்பாலுய்க்கத்
துன்றுமாமணமுமுற்றிச்சூழ்படையோடுமன்னன்
பொன்றிகழ்கவுடநாடாபுரத்துவந்திருத்தானென்றான். (ருசு)

வேறு.

இவ்வுரையியம்பலுமிருந்தமோகனு
டவ்வயினின்றவராருந்துண்ணென
வெவ்விடிமேலிடிவிளையக்கேட்டவெம்
பைவருமரவினைப்பண்பொத்தாரரோ. (ருஎ)

அறைபறைகேட்டதோரசுணமாநிக
ரிறையவன்மிக்கதோரச்சமெய்தியே
முறைமுறைவிடைதருகென்றுமொய்த்தவர்
துறைதொறுமுகமெடுத்திணையசொல்லினான். (ருஅ)

அத்திறலறிஞர்பாலடுத்துமால்சிவ
பத்தியர்புரியருட்பார்வைதீர்த்திலஞ்
சுத்திதன்றிருமகடூதுசெல்வழிப்
பொத்தியாங்கவளையுமபோய்க்கவர்ந்திலேம். (ருகூ)

உணர்வுடைமன்னவனுபநிடத்தைசேர்
மணவினைநாளினுமாற்றுகின்றிலஞ்
கணமுறுமியாமெலாங்கழிந்தநீர்க்கிடு
மணையெனவினிமுயன்றுவதென்கொலோ. (சுo)

நெடியநம்மொன்னலார்நினைவின்வண்ணமே
முடிவுறப்பெருகினமுயன்றசெய்தொழில்
படிவுறுநந்தொழில்பரந்தநீர்நதி
வடிவுறுந்தன்மைபோல்வாடிவந்ததால். (சுக)

என்றிணையன பலவியம்புமன்னனை
நின்றுகைகூப்பிவெண்ணிலவெழுங்குடைத்
தென்றலந்தேரினான்சிந்தைதேற்றுவா
னென்றவாசகமினையவோதினான். (௬௨)

சடிக்கமலாசனன்கன்னிகைமலர்
பிடிக்கினுமென்னவன்பிறழென்பூங்கணை
வடிக்கின்முன்னிற்பனோமழைக்கலாற்குடை
பிடிக்கெதிர்பிடிப்பவர்யாவரேகொலாம். (௬௩)

முற்றியமணங்கொடுமோகநம்படை
வெற்றியுந்தாழ்க்குமோமேலவர்க்கொரு
வற்றியமரந்தளிர்வாங்கிற்கானெலா
முற்றவெவ்வழல்சுடாதொழியுமோவென்றான். (௬௪)

அன்னவனீதுரைசெய்யவவ்வயின்
மன்னவன்வனந்தமலிக்கொதுங்கிய
பொன்னலாருஞ்சுருதூர்புக்காரொளி
மின்னமுநங்கேட்பவையிவைகொலோவென. (௬௫)

காரியமோராநந்துதங்கருத்துட்கொண்டினிச்
சீரியவண்ணம்யான்செய்வனின்றெனப்
பேரியற்றலைவர்கணிற்கபின்னுளார்
நீரிதுசெய்திரென்றிவைநிகழ்த்தினான். (௬௬)

இடம்பனையிழைத்திவ்வூரெங்குமேயுனக்
குடன்படுமிடாமபிகரோடுமேபுக்குநீ
விடம்பரந்ததுவெனவிவேகனெய்திய
கடம்பயினெறியெலாங்காத்திபோவென்றான். (௬௭)

மருகனுகியவனுசாரன்வாவென
வருகழைந்தறிவுடையனையர்சேனையவ்
விருநதிதனுறைறதொறுமெய்துறுவகை
கருதியாங்கவணைநீகவர்தியாலென்றான். (௬௮)

ஞானநீர்மையுநதவநலும்பாழ்பட
மீனநீருகனுநாடகன்றுமீட்டுமக்
கானநீடிசைதொறுங்காப்பதற்கவ
மானநீயாங்கவர்வழியிற்போவென்றான். (௬௯)

காமஞ்சரியார் சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௦௩௦.

## உரு - வது, நியாயன்றாதுச் சருக்கம்.

ஓதிவ்வாசகஞ்சிலர்க்குரைந்துமன்னவன்
போதிராலென்றவண் விடுக்கப்போயபி
னீதிகேள்வனுமதிநிருபனேவலால்
வீதிவாய்மடங்கல்போல்விரைவினெய்தினன். (க)

வேறு.

அன்றனெய்தக்கண்டனர்கண்டாரதிமோகன்
முன்னுகச்சென்றற்றுநியாயன்முதிர்கோப்ப்
பன்னகத்திற்பாய்கலுழன்போற்பகையஞ்சா
தின்றளிவ்வூர்வந்தனனென்றிங்கிதுசொன்னார். (உ)

அனையானிவ்வூரெய்தியதென்னென்றம்மோக
னினையாமுன்னன்னீதிமன்னுளனெய்தி
மனைவாசற்றிண்காவலர்நீரொன்வரவோதீர்
புனைவாசத்தார்மார்பனொடென்னப்புகல்கின்றார். (ங)

மன்னநின்பால்வந்தனனிங்கோர்மதிநாதன்
றன்னுலேவத்தக்கநியாயன்றனியேயென்
றன்னுரோதிச்சொற்பணிகைக்கொண்டவர்மீண்டப்
பொன்னார்தோளானைக்கடிதங்கேபுகுவித்தார். (ச)

காவலன்முன்போய்க்கைதொழுதானைக்கைகூப்பி
யேவலர்தம்மாலாதனமொன்றிட்டெதிர்வைகப்
பாவனைசெய்தென்பக்கலினீயிப்பதியூடே
மேவியதென்னேசொல்லுதியென்றவினவுற்றான். (ரு)

கொற்றவனச்சொற்கூறவனத்திற்குலவுற்றான்
சிற்றவைநல்குஞ்செல்வரியாருந்தீதின்றி
யுற்றனரோங்குமிராடங்கர்க்கணுன்பின்னேன்
சொற்றவைநின்பாற்சொல்லியவந்தேன்றாதென்றான். (சா)

அங்கதுவென்னேசொல்லுதிநீயென்றவனேதப்
பங்கமில்காமன்கோபனுலோபன்பலர்பின்னுந்
தங்கவையுள்ளோருள்ளமதிக்கத்தகுமோகற்
கிங்கிவைகேளென்றுற்றதுரைப்பானிவைசொன்னன். (எ)

### வேறு.

வையகமுழுதுநின்பால்வழங்கிமானதனெங்கோவைக்
கையறவிகந்தகாலைக்கருத்தருள்சிறிதுமின்றி
நெய்யழலுற்றாலென்னநீயுமங்கவனைக்காய்ந்து
மெய்யயர்ந்துலையும்வண்ணம்வெவ்வனம்புகுவித்தாயால். (௮)

அன்னவன்றன்னையல்லாலன்னையாநிவிர்த்தியோடுந்
தன்னருங்கிளைஞராரோர்தம்மையுங்குலையத்தாக்கிப்
பின்னருமெண்ணில்கோடிபிழைபுரிந்தகலநீக்கி
யின்னல்செய்வித்துநின்போலெவரோயிரக்கமில்லார். (௯)

அத்துயருழந்தானேனுமரிசிவபத்திமாதர்
வைத்துளகருணைதன்னுன்மலரயன்மகளைவேட்டு
மொய்த்துறுகிளைஞரோடுமுரணுடைப்படைஞர்சூழ
வித்தினங்கௌடதேயத்திராடமாநகர்வந்துற்றான். (௧௦)

அன்னகர்வந்தகோமானிருரற்புகழ்விவேக
மன்னவனுதலாலெவ்வருத்தநீயியற்றினாலும்
பின்னருங்கருணைகூர்ந்துபிழைசெயக்கருதாதுன்பா
லென்னையின்றேவவந்தேனென்றுபின்னினையசொன்னான். (௧௧)

இனவளைக்கடல்சூழ்வையமெவற்றையுமின்றுகாறுந
தனமெனப்பெற்றசெல்வந்தனையினிவிடுத்துநீங்கி
நினதுயிருய்யவேண்டினின்னருங்கிளைஞரோடு
மனகநல்விவேகவேந்தனருட்பணிசிரத்திற்சூடி. (௧௨)

கானகவேடர்கள்வர்கடற்கரையுறையுந்தீயோர்
சோனகர்மிலேச்சராகுந்துருக்கர்பப்பரர்கள்சாதி
யீனமொன்றினையர்வைகுமிடங்களிலினங்களோடு
நீநயந்துறைதியென்றுநிகழ்த்தினன்பின்னுஞ்சொல்வான். (௧௩)

தம்பியர்தமக்குவையந்தயரதராமனும்பி
னிம்பர்வீடுமனுநல்கியிருந்தவாறுணர்ந்திலாயோ
வெம்பியபடைஞர்சூழமேவியிந்நாட்டினுற்ற
வும்பியர்தமக்குநீயுமுதவுதன்முறைமையாமால். (௧௪)

இன்னவைசெய்தியாகிலெவருக்குமூத்தோனென்னு
முன்னரும்புகழினோங்கியுறவொடுஞ்செல்வத்தோடுந்
துன்னுபல்கிளையுஞ்சுற்றத்துன்மதியினத்தோர்போற்ற
நின்னிகர்யாருமின்றிநீணிலத்திருக்கலாமால். (௧௫)

நீயிதுமறுத்தியாகினெடும்புகழ்வாலிமைந்தன்
வாயுரைமறுத்தபத்துமவுலியான்போலமாயன்
போயுரைத்தமையுட்கொள்ளாப்புயங்ககேதனனைப்போல
மேயவுஞ்சுற்றத்தோடும்விளிவதுசரதமென்றான். (௧௬)

என்றவனுரைத்தலோடுமிருந்தமாமோகவேந்தன்
மின்றிரிந்தென்னநக்குவியன்முடிதுளக்கிச்சால
நன்றிதுநன்றிதென்னாநவின்றுநன்னிதிகேள்வன்
றன்றிருவதனநோக்கித்தானிதுபுகல்வதானான். (௧௭)

முன்னைநாளரசுதந்துமூன்றுலகினுக்குமென்னை
யென்னைமாமவுலிசூட்டியிகந்தனன்விவேகனோடு
மன்னையாமவளையென்பதறிந்திருந்துரிமைகேட்ட
நின்னையாநீதிகேள்வனியாயமென்றுரைப்பதம்மா. (௧௮)

தாதையங்கவருக்கோர்பாற்றரிக்கவுமிடங்கொடாமன்
மோதிவிட்டிடுதியென்றுமொழிந்தசொற்கேட்டுங்கானிற்
போதவிட்டிருந்தவென்பாற்புகுந்துதன்னுரிமைகேட்கத்
தூதுவிட்டவரோநீரோதுணிந்தவர்நும்மில்யாரோ. (௧௯)

கலிமுதலோர்க்குத்தப்பிக்கைப்புகாதுயர்ந்தாரொன்று
நலிவுறாதுபடிடப்பெண்ணன்மணம்பெற்றொன்று
மொலிகடலுலகமெல்லாமும்பியர்க்கீதியென்றும்
வலிமையும்வழக்குநினபோன்மற்றினியாவர்சொல்வார். (௨௦)

நேயமுமுறவுமாற்றிநிவிர்த்தியென்றுரைக்கப்பெற்ற
தாயொடுதனையுமேனாட்டாரமுஞ்சுதனுமன்றென்
றாயவென்றதைநீக்கியனையனைத்துறந்தானென்று
லேயவப்பிதுர்த்துரோகியெனக்கெவ்வாறெம்பியாவான். (௨௧)

மேதகுமிராமனோடுவீடுமென்றனுமேனாட்
பூதலமுழுதுநல்கிப்புறத்தவர்போயதன்மை
காதலிற்பொருந்துந்தத்தங்காந்தையர்க்கன்புகூருந்
தாதையர்பொருட்டினாலோதம்பியர்க்கிரங்கியேயோ. (௨௨)

இன்னிலந்தனக்கேயாகவினர்நாடெனக்குநல்கும்
பின்னவனியற்கைநன்றாற்பிழையிதுபொறுத்துமீட்டு
மன்னவற்கினியீந்தாலுமடவியான்கொடுப்பதல்லாற்
கன்னலங்கழனிநாடுகனவிலுங்கொடுப்பதுண்டோ. (௨௩)

மாலுயர்சம்புபத்திமடந்தையாருளுண்டென்று
மேலயன்பெற்றமாதைவேட்டுடபெற்றேமென்றுஞ்
சேலுகணாட்டிலெய்திச்செபமியவண்மையாவு
மூலமோடொருங்குமன்றேமோகன்யான்முனியிலென்றான். (உச)

அவனஃதுரைத்தலோடுமடுத்தவக்குதர்க்கனைய
சிவனயனிந்திராதிதேவர்க்குநின்றுற்றத்தந
தவநிலையழிந்ததென்றாற்றானெதிர்நிற்கவல்லா
னிவனொருவிவேகன்கொல்லாமென்றெயிறிலங்கநக்கான். (உரு)

பின்னருநியாயன்றன்னைநோக்கினன்பிணைமானொன்று
முன்னொருகலைமான்சென்னிமுளைத்தெழுங்கோடுகண்டே
வன்னெடும்புலிமுன்போயுமவனமதற்கீதியென்னாச்
சொன்னதுகடுக்குநீயும்வந்திங்குசொற்றதென்றான் (உசா)

ஈதவனுரைத்தலோடுமிறைமுகமுலோபனோக்கிப்
பூதலவைபமிலோரொட்புதையுஞ்சிற்றிடந்தானேனு
நீதரற்கனையர்தம்பானினைக்கினுநிவிர்த்திபோலத்
தாதைமானதனுக்கிங்குன்றாயுமின்றவளென்றான். (உஎ)

அன்னையைவெறுத்தநாலையறிவுடைவிவேகன்போல
நின்னையுமெங்கணோடுநிந்தைசெய்தப்பாற்றள்ளிப்
பின்னருநுமமால்வந்தபெயர்வுறச்சோகந்தன்னான்
மன்னனாந்தாதைதானுமாய்வனென்றறியச்சொன்னான். (உஅ)

இனையனபிறருந்தந்தமெண்ணினுக்கியைந்தயாவு
மனையமன்னவையிற்சொல்லுமளவிலக்ரமனங்கெய்திக்
கனைகழற்காலநீலக்கலிமகனதன்மனோடு
முனையிற்செங்கைமோகன்முன்புநின்றினையசொன்னான். (உகூ)

பைத்தலைபபணிநண்முன்னர்ப்பயமுறாதெலிசென்றென்ன
வத்தலையோர்கள்வாய்மையறைந்திடநமபால்வந்த
பித்தனைப்பிடித்துத்தாளிற்பெருந்தளைப்படுத்தாதின்ன
மித்தனைபேருந்தாழ்த்திங்கிருக்கின்றதென்னேயென்றான். (௩0)

அன்னவனருகினின்றவதன்மன்மன்னவனைபபார்த்துன்
பின்னவளகீர்த்தியென்றுமபேதையென்மருகனென்று
நின்னருகிடைவிடாமனிற்றலாணியாயனென்பான்
றன்னையெவ்வகைசெய்தாலுந்தக்கதேயாகுமென்றான். (௩க)

வெங்கலிமகனிவ்வார்த்தைவிளம்பலுநீதிகேள்வன்
சங்கரன்புரத்தைமேனாட்டழலெழநகைத்தாலென்ன
விங்கெனைக்கவரவல்லாரேவரோயிவனுளானொன்
றங்கைகளொன்றினேடொன்றதிர்வுறத்தாக்கிநக்கான். (நஉ)

வீரனுநியாயன்பின்னும்விறற்கலிமகனைநோக்கி
யோரொருபேராய்நீரிங்குறுதிரோவொருங்கேயுள்ள
பேரனைவிரும்வந்துபிடித்திரோகபாலிதன்னைச்
சீரறனுதைத்தாலென்னச்சிதைத்தியான்சேறற்கென்றான். (நந)

அவனதுபுகலலோடுமகங்கொதிகொதிப்பவாயிற்
றுவரிதழ்துடிப்பமீசைசுறுக்கொளவுயிர்ப்புவீங்க
நுவலருஞ்செந்தீச்சிந்தநோக்கியத்தூதன்றன்னை
யிவனுயிருண்பனென்றுவெழுங்கோபனினையசொன்னான். (நச)

மிகுந்தருமனைமுன்காத்தமென்கொடியருளுண்டென்னு
மகந்தையோடினைக்கோறற்கிவ்வக்ரமன்போதாதோதான்
றகுந்திறலெம்பாலீங்குதரியலார்விடுக்கத்தூது
புகுந்தனையாவியுய்ந்தாயெழுதியாற்போதியென்றான். (நரு)

என்றவனுரைத்தலோடுமெழுநதனனியாயனிப்பா
ணின்றவணிருந்தோரியாருநெருப்பெதிர்புகுந்தேனென்னப்
பொன்றுதலுறுமுனின்றேபுறஞ்செல்வார்போமினென்று
வன்றவன்புகன்றுமீளவறிஞர்கோன்மருங்கிற்சென்றான். (நசா)

அவனெழுந்தகன்றபின்னரரசனையுலோபனேக்கிச்
சவையில்வந்திங்குளோரைச்சங்கியாதகன்றதூதைக்
கவருதற்கொருவனேனுங்கண்டிலமென்றானம்பி
லெவரினிவிவேகன்வந்தாலிகல்பொரவல்லாரென்றான். (நஎ)

மானன்மன்னவனைநோக்கிமாதுரியோதனுதி
யானவர்தம்பாற்சென்றுமைவர்க்கொன்றளித்ததுண்டோ
மேனலந்தருவனேனுமேவலர்நண்பராகித்
தானதையுட்கொளாதனிமையேயினிமையென்றான். (நஅ)

நியாயன்றூதுச் சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கoசாஅ.

---

## உசு- வது, காமனுதியர் விரலாபச்சருக்கம்.



அன்னவனினையகூறவாங்குறையதிமாமோக
மன்னவனருகினின்றமாரனுதியரைநோக்கி
யொன்னலர்திறலுமன்னுருக்கமுஞ்செருக்கும்வண்ண
மின்னதன்மையினுலென்பதியம்புதிரெவருமென்முன் (க)

என்பவைசொல்லக்கேட்டவிரதிநாயகனம்மோகன்
றன்பதம்வணங்கிநம்முன்சத்துருவாகியுள்ளார்
வன்பதுநிற்பதெங்கேவல்லிருளஞ்சுங்கொல்லோ
மின்பலமின்னினுலுமென்றிவைவிளம்பினுல். (உ)

வேறு.

தாதவிழ்பூங்குழற்கனிவாய்த்தத்தைமொழிமுத்துநகைத்தை யலார்மேற், காதலுறப்புரிசெயலேயென்வடிவாயவரவர்தங்கருத் துட்டோன்றி, யேதம்விளைவிக்குமென்னுலிரதியாலெனதுசின்ன த்தியல்பாலென்று, மாதழுவுற்றின்மென்னுமவ்வலையிலெவ்வுல கோரகப்படாரோ. (ங)

ஒத்தேறுமுருவமில்லாப்பிரமமொன்றுமேயொழியவுருவமு ள்ளா, ரொத்தேவராயினுமோர்பூங்கணையாற்றம்போதமெல்லாநீங் கி, மத்தேறியுடைதயிர்போன்மனஞ்சுழன்றுசெயன்மறந்துமட வாராரைப், பித்தேறியிதமுரைத்தப்பேதையர்க்கும்பேதையராய்ப் பின்செல்வாரால். (ச)

அலையேறும்வாரிதிசூழமபுவியிலென்னைவெல்வாராரோசெந்தீ, யுலையேறுமெழுகெனமுக்தேவரும் பூங்கணைக்காற்ருதுருகி வெள் ளி, மலையேறினுனெருவன்கடலேறினுனெருவன்மறைந்துவிண் ணின், றலையேறினுனெருவனுயினும்போயின்னமங்குத்தவிர்ந்தா ர்கொல்லோ. (ரு)

வேதாவுமுகம்வெளுத்துவிண்டுவுமார்பகஞ்சிவந்துவிடைவல் லோனும், பாதாதிகேசாந்தம்பாதியுடல்கறுத்துவச்ரபாணிவேந்து ம், போதாமன்முகத்திருகண்புறத்துமோராயிரங்கண்புகுதப்பெ ற்ற, தேதாலென்கணைதூக்கிலீடுபடாரெவரெவரோயிலக்காகாரோ.

வேதமுதலாகியவெண்ணெண்கலையும்வெண்கலைமான்வியந் துகேட்க, வோதியுணர்ந்தும்பிறருக்குரைத்துமுயர்பெரியோர்க்கு முளவிவேகங், காதளவுமடர்ந்துகுழைகடந்து குமிழ்மறிந்து

பொருங்கயலைச்சீறும்,பேதையர்கட்கணைபாயுமவ்வளவேயல்லாது பின்னுமுண்டோ. (எ)

செங்குமுதவாயதரச்சேயிழையார்நேயமெவர்திறம்பலாவா, ரங்கவர்தம்பார்வையினாலார்க்கு மனங்கரைந்துருகாததுவுமன்றி, யிங்கெனதுபோர்ஞாலத்தெவ்வளவுண்டவ்வளவுமெவரோமாயக், கங்குல்விடிந்திருள்கழித்துக் கண்ணும்விழித்துணர்வினதென்றுகாண வல்லார். (அ)

வேறு.

வள்ளமாமுலைமினார்வாள்விழிப்பார்வையைத்
தள்ளுவார்போரினெடுஞ்சபையில்வந்தேறியே
கள்ளமோடுரைசெய்வார்கல்வியூடலதுதம்
முள்ளமூடவரைவிட்டொழிவுளாரியாவரோ. (கூ)

மஞ்சுநேரியானைதேர்வாசிகாலாளினம்
பஞ்சுபோன்மாளவோர்படுகனற்பொறியெனத்
தஞ்சம்வேறின்றியேகாவுபோர்வீரரு
மஞ்சுபூவாகுமென்னம்பினான்மாய்வரோ. (க0)

உந்தமுற்றேவியைச்சண்டனென்றுண்டநரு
சந்திரன்றன்குருத்தாரமோடுற்றது
மிந்திரன்மைந்தனுக்கிருகமென்றானதும்
வந்துபண்டைவரோர்மனைவியைக்கொண்டதும். (கக)

புக்கடர்ந்திரவியோர்கன்னியைப்புணர்வுறத்
தொக்கடுத்தருள்கொடைச்சுதனைமுன்பெற்றது
மைக்கடற்கிறைவனுமருவுமித்திரனுமே
மெய்க்கடத்துடுதம்வீரியமவிட்டதும். (கஉ)

இவைகொலோவினையவாயெண்ணரும்விழைவினு
னவையுறுவியல்பருங்ககையுறுந்தலைகயராய்ச்
சவையுளோர்நகைசெயுந்தன்மைசெய்துடையர்மற்
றவையெலாமடியனேனுண்மையாலல்லவோ. (கங)

விரகநோய்புரியுமெம்வீரமேமேம்படக்
கரதலாமலகமாய்க்கலவியைக்காட்டியே
சுரதமோருருவமாய்த்தோன்றுமென்றணைவியா
மிரதிலீலாவிதமியாவரோசாற்றுவார். (கச)

காதுகாளத்தினுங்காயமோர்தேரினுந
தீதில்கணகுடையினுஞ்செய்யநாவில்லினும்
போதுநேர்நாசியம்பினுமொராம்புலனுமுள்
ளாதலாலெனதுசின்னங்களையமையுமால். (கரு)

மேவுமென்னுதவியாம்வீணையுமேடையுங்
காவுநன்னதிகளுங்கலவையும்புதுமணற்
பாவுதண்குன்றமும்பஞ்சவாசமுநறும
பூவுமுள்ளளவுமார்போதமுள்ளார்களே. (கசு)

பண்டைநாண்மீயனைபபகர்விருந்தைக்குமால்
கொண்டுநாஞுசுராக்கோலமாயவண்முலைப
புண்டரீகத்தடமபுணருவித்தவனுமென்
விண்டதாமதலையாம்விடயவானந்தனே. (கஎ)

என்றுமற்றிவ்வியலரிரதிநாதன்சொலா
நின்றவபெருழுதின்வாய்நெடியமாமோகன்முன்
சென்றடுத்திதன்பெருந்திறலினிக்கேளெனக்
குன்றெனத்தகையவெங்கோபனீதோதினன். (கஅ)

சாற்றுமுள்ளுறுமவிருப்பந்தடைபபடிலெழுஞ
சீற்றமேயுருவமாமெனையுமென்சிந்தைநோய்
பாற்றுமோர்கொலையெனுமாதையுங்கலகனு
மாற்றல்சேர்மகனையுமார்கொல்வெல்வார்களே. (ககூ)

நீர்தரிக்குஞ்சடைக்கடவுணன்னியமம்யான்
பேர்தல்செயவித்ததுமபின்றுமென்றேவியா
லார்தனக்கெதிரொருவரையுமிக்காமன்மெய்
தீர்தல்செய்வித்ததுநேர்வுறார்யாவரோ. (உ௦)

எதிருறத்துடிதுடித்தெரிவிழித்துணைசிவத்
ததிர்கொள்சொற்படபடத்தங்கமுமபதைபதைத்
துதிரமெய்க்குலைகுலைத்துட்கொதித்தெழுசினக்
கொதிபொறுப்பவர்களெக்குவலயத்தவர்களே. (உக)

தெருளறக்கலையினிற்றிறனறச்சிந்தையூ
டருளறப்பெரிதலைத்தறிஞராமவரையுங்
குருடெனச்செவிடெனக்கொடியர்மற்றிவரெனப்
பொருடெரித்தழலெழப்புகலுவித்திடுவனால். (உஉ)

தூயசிந்தையுமறத்துணிவுமுண்டாயினுங்
காயும்வெஞ்சினம்வரிற்கற்றுணர்ந்தோர்களுந
தாயர்தந்தையர்பெருந்தம்முனுற்றார் தமக்
கேயநண்புடையரொன்றெண்ணவுங்கூடுமோ. (உங)

கோபமெய்க்கொடியன்யாணெய்திலார்குலைவுறார்
தீபமொத்தொளிர்தபோதனர்களுஞ்சினமெனும
பாபமுற்றயலுளோர்பதைபதைத்துயிரிறச்
சாபமிட்டனையர்தந்தவமுமவிட்டிடுவரோ. (உச)

மாவசிட்டன்றனன்மக்களைக்காதிசே
யேவலிற்செல்கிலீரொயினராகுதிரெனச்
காய்வுறசசெய்துமுற்சகரரைக்கபிலனு
லாவிசெற்றவருமென்னிஞ்சையாமரிவையே. (உரு)

அரணிடர்தெய்திமற்றனையனைபின்னுமுப
புரமெரித்தெதிர்மதப்போசுரந்தனையுரித்
துரநெரித்தடவிராவணனையோதிமனையோர்
சிரமறச்செய்ததார்தேர்வுறுதார்களே. (உசா)

தடமலர்க்கண்ணனுந்தரணிமேவிரணியன்
குடர்பறித்தவுணரைக்கொன்றுநீணிருதரைப்
படமலைத்தொருவனைப்பத்துமாமுடிதகர்த்
திடருறுத்தினருமென்னிஞ்சையாம்வஞ்சியே. (உஎ)

பரவுமன்னவர்குலப்பகைபிராமன்கையாற்
பெருகுமுள்ளன்புடைப்பெற்றதாய்தன்னையும்
வெருவவிண்ணரசனுல்விசுவருபன்னெனுங்
குருவையுங்கொன்றதக்கோதைதன்கொள்கையே. (உஅ)

பாரதாதியினெடும்பச்சைமாலைக்கொடே
போரதாகும்படிக்கிசைவுசெய்புதல்வன்மேற்
பேரதாகுந்தவப்பெரியமாதவர்களா
நாரதாதியரில்யார்நண்புறாதார்களே. (உகூ)

பொறையுமாமதிநலம்புணர்விவேகனுமிசைத்
துறையுமோரிடனும்வெந்தொழிவுறும்படியெரித்
திறையுமோகனையலாலெங்கும்வேறிலையெனும்
பறையுமோதுவனெனப்படபடத்தோதினன். (௩0)

அனையவன்பகரும்வாசகமகிழ்ந்தரசர்கோன்
வினையையென்றவர்கள்போன்மிளிருமவ்வேலையிற்
றனையகன்றவரியார்தவமுயன்றவருமென்
றினையமாலோபன்வந்திறைவனோடுரைசெய்தான். (௬௧)

வேறு.

உற்றபொருள்பற்றியுதவாமையுருவாமென்
வெற்றியுமுறாதபொருள்வேட்கைவடிவாகு
மற்றெனதுதேவியெனுமவாஞ்சையுமலைந்தாற்
கற்றறிவுளாரொனினுமியாரவைகடப்பார். (௬௨)

நம்பகைவிவேகன்முதனண்ணலருநண்ணற்
குமபருறுபோகமதையுன்னிவிரதஞ்செய்
தைம்புலனொடுக்கிமகமாதிபிறவுந்தா
மிம்பரினியற்றுவதெனிச்சைசெயலன்றோ. (௬௩)

மேவுபிரசேனனெனுமவேந்தனையடுத்தே
தேவகிகுமாரனொர்சமந்தகவிரத்நந்
தாவெனவுரைத்துமணிதானருள்செய்யாதே
போவெனமொழிந்தமொழியார்கொல்புகல்வித்தார். (௬௪)

தூதுமுனடந்தொருசுயோதனனையைவர்க்
கீதியவர்தமமுரிமையென்றெதிரியமபு
மாதவனொடுள்ளளவுமண்ணிதுகொடேனென்
றோதியதென்னேவலினுரைத்தமொழியன்றோ. (௬௫)

புலியனும்மெனதுபொற்கொடிபொருட்டா
லாவலுறுதன்கிளையொடையமதுபுக்கா
னேவுமவளாற்பலியவ்வீசனுமெடுத்தான்
மாவலியைமூவடிமண்மாயனுமிரந்தான். (௬௬)

தங்குபுவிமாநதொவர்தாமுமுணர்வின்றிப்
பொங்கிரவுநண்பகலொர்போதுமொழியாதே
யஙகடவிநாடுமலையாழ்கீடலிவற்றோ
டெங்குமுலைகின்றதுமெனிச்சையியலன்றோ. (௬௭)

கும்பமதயானையெதிர்கோட்டிபலகொண்டுங்
கம்பமிசையேறியொர்கயிற்றிடைநடித்தும்
வெம்பணிபிடித்துமிவைபோலும்வினைமற்று
மம்புவியுளோர்செயலனைத்துமவன்பண்பால். (௬௮)

மாதுயரமுற்றெனினும்வஞ்சனைசெய்தேனு
மோதுபொருள்பெற்றதுகொடுள்ளதைமகிழ்நதே
யேதமுறுமென்மனைவியிச்சையிவடன்னாற்
போதுமிவையென்னுமவர்பூமிசையில்யாரோ. (௩௯)

அன்னவள்பெருங்கட்டுமற்பமெனவோங்கித்
துன்னுமளவின்கண்மிகுதூயவர்தமக்கு
மின்னவர்நமக்கினியரென்பவரிடத்தும
மின்னருள்கருத்திடைபிறக்கவுமவராதே. (௪0)

எண்டலமதற்குரியளவிநதனமதெல்லா
முண்டுமெழுவிற்கொழிவுறுதபசியொபப
வண்டபகிரண்டமுமகட்டிணிடையேயுட்
கொண்டுமொழியாதெனதுகோதையவட்கென்றான். (௪க)

அநதமொழிலோபனுரையாடவவனஃது
மைந்தனெனலாகியவிடம்பனுமவணங்கிச்
சிந்தைநெடுமோகன்மகிழ்ந்திரள்விடம்போன்
முந்தியதன்வல்லபமொழிந்திடுவதானான். (௪௨)

தனக்கியலொழுக்கமறுமைக்கதொருசார்பாய்
மனக்கொளலறப்பிறர்மதிப்பதுபொருட்டாம்
வினைப்படிவமாகுமெனையவ்வினைமறைத்தற்
கினித்தவளென்வஞ்சனையையாவர்கொலிகந்தார். (௪௩)

எடுத்தபொருளியாவர்கொல்கொடாதவர்களெவ்வே
ரடுத்தவர்தமக்கதருடுத்தவானுக்கே
கடுத்தருமொர்பாற்கடல்கவுத்துவவிரதந்த
கொடுத்ததுபொன்னுடைபுனைகொண்டல்பெறுமன்றே. ( )

வாசவனையாதிமிசைவானவர்தம்முள்ளுந
காசினியின்மானிடர்கணத்தினுமிடம்பம
பேசவருவேடமெவர்பெற்றிலர்பெறாதா
ரோசவருபித்தரிவரோமையெனலாவார். (௪௫)

வஞ்சனையுமியானுமுடன்வந்தெதிர்மலைந்தா
லெஞ்சலிலசோரனுயிர்நீடுபடுமட்டோ
பஞ்சுகனலிக்கெதிர்படும்படிபடாதோ
வஞ்சலில்சுசீலனவனுண்டொழிலுமம்மா. (௪௬)

உன்னருமென்ஞண்மையிதனைப்பெறுகொல்பின்னு
மென்னரியபாலகனசத்தியனெனும்பேர்ச்
சின்னவயதுப்பயலொர்சில்விடமதொப்பா
னன்னவன்மயக்கினையகன்றவர்களியாரே. (சஎ)

அன்றொருவனுக்கொர்பதிஞறுவயதீசன்
முன்றருவழக்ககலமொய்வலிமைதன்ஞற்
கொனறுநமனைபொய்யுரைகூறினைகொலென்பார்க்
கென்றுமதனிந்தனனியானெனவுரைத்தான். (சஅ)

நாதனமுடிகண்டதுளஞெனவுமோதிக்
கேதகையையுங்கொடுகிளர்த்துதல்பணித்த
வேதனுமனஞண்மலரும்வெள்ளிமலையோஞற்
போதவருசாபமொருபொய்மமொழிகொடன்றே. (சகூ)

வித்தகவிவேகமொடுவீறுமழியப்போ
யுத்தமர்குணங்களையுமுழைக்குமவஞலெ
யத்தருமபுத்திரனுமன்றொருபொய்சொன்ஞ
மித்தகாயிலார்பொயிசையாதவர்களென்றன். (ருo)

அம்மொழியிடமபனுரையாமுனடன்மோகன்
செமமலர்முகத்தினெதிர்சென்றுகைகுவித்தே
யெமமதமவிலக்குமவரியாருலகிலென்ஞ
வெம்மதனிவ்வாசகமவிளமபிடுவதாஞன். (ருக)

Cவறு.

நெடியசெல்வமுடைமைகொண்டுநெஞ்சிடைக்களிப்பதே
வடிவமாகுமியானுமம்மயக்கையேவளர்பபதாங்
கடியதேவிமறதியுங்கலந்தபோதிலியாவரே
படியில்வானில்வெற்றியமபதாகைநாட்டவல்லரே. (ருஉ)

அஞ்சுசென்னியுண்மையாலரற்கியானுமொப்பென
நெஞ்சிலுன்னிமெய்மதத்தநீர்மையைக்கொடல்லவோ
கஞ்சமன்னகண்ணஞபியுட்பிறந்தகடவுடா
னஞ்சமுண்டகண்டஞலொர்நான்முகத்தஞனதே. (ருங)

ஆசுறுதசெல்வமோடடுத்தவச்சிராயுதன்
வாசநாறலங்கலைத்துர்வாசனல்கவாங்கிமுன்
வீசுறுவெறிந்ததேறும்வேழமாமதங்கொலோ
வேசுறுதன்மதங்கொலெம்மதங்கொலென்பதே. (ருச)

நிகரிலற்பர்சிந்தையூடுநின்றுதூயர்நெறியையு
மிகழுவிப்பனென்னொடேயிறந்துபோமிவ்வுலகெனப்
புகலுவிப்பனெவரொடும்புகுந்துபோர்செய்விப்பனிவ்
வகலிடத்தைமேருவோடொரணுவுமாக்குவிப்பனே. (௫௫)

வந்தடர்த்தொர்சேதிராசன்மாலையன்றுவைதது
மந்தவத்துவைச்சுயோதனாதியோரிகழ்ந்தது
நந்தியைப்பழித்திலங்கைநாயகன்னவின்றது
முந்துசத்தமுனிவர்தம்மைநகுடனன்றுதைந்ததும். (௫௬)

அன்றுவேலையெற்றிமாலையடுசமர்க்கழைத்ததுநேர்
கன்றுபோரிரந்துகாளகண்டன்வெற்பலைத்துமேற்
சென்றுவாலிதன்னொடுஞ்செருத்திறம்புரிந்துசீர்
தின்றுகார்யமன்றுமாய்தறுநதுமிக்கும்வந்ததும். (௫௭)

பின்னுமின்னதன்மைசெய்தபேரனந்தகோடியான்
மன்னுமிந்தமண்ணகத்தும்வானகத்துமவையெலா
மென்னையன்றியாவரேபியற்றினோரிதன்றியென்
பன்னியென்னுமறதிமேன்மையெவருணர்ந்துபகர்வரோ. ()

அறிவுகற்றகலவிவாய்மையன்புமுன்படுத்தநல்
லுறவுநட்பொழுக்கமேன்மையொருவர்செய்தவுதவிசீர்
பிறவுமின்னசெய்கைமற்றதெவையுநெஞ்சுபேர்வென
மறதியுற்றபோதியாவர்மனிதர்தேவர்மதியுளார். (௫௯)

பிரகலாதன்மாயனோடுபின்புபோர்புரிந்ததுஞ்
சரதவாழ்வுசுக்கிரீவர்தாமியைந்திராமர்பால்
வரவுதாமதித்ததுந்துரோணர்நட்பும்வாய்மையுந்
துருபதேயன்மாற்றிவந்தபோதிகழ்ந்துசொன்னதும. (௬௦)

மகிழ்ந்தணைத்துநாளைநின்கண்வருதுமென்றவாய்மையைச்
சகுந்தலைக்குமகிணனார்தவிர்ந்தயர்த்ததன்மையும்
புகுந்தவெத்திறத்திலென்னோர்பூவையாலுளநதிகைத்
திகந்தபுத்தியோரையின்னமெண்ணிலெண்ணிலோர்களால்.

மதுவினுள்ளுமவினியாதியானபன்மருந்தினுங்
கதுவுபுல்லர்வாழ்வினுங்கலந்துவைகியுலகெலாம்
பொதுவினின்வசத்தினிற்பொருத்துமெழுமையாவரோ
வெதிர்புகுந்துவெல்லவல்லரென்றிவ்வாறியம்பினான். (௬௨)

வேறு.

மதனிவையுரைத்தனுமெழுந்துமன்னவன்
பதமலர்வணங்கியிப்பாரில்வாணிலென்
னெதிருறுநகையர்மற்றியாவரேயெனுக்
கதுமெனமச்சரன்கழறன்மேயினான். (௬௩)

அன்னியற்கறிவுருவாக்கங்கண்டுகே
டின்னியுட்பொருமையாமுருவினேனுடன்
றன்னினுட்புழுங்குமத்தன்மையேவடி
வென்னுமென்னசூயையையாவர்வெல்வரோ. (௬௪)

முன்றனைக்கோடியாண்டொருவன்முக்கணன்
றுன்றாப்பெற்றநாட்டடுத்துப்பின்னரு
மென்றனைக்கோடிபோயின்னங்கேளென
வான்றனையளந்ததாண்மாயன்சொற்றதும். (௬௫)

தெரியநற்கலைபுணர்திலீபமன்னவ
னுரியமாமகத்தொண்ணூற்றொன்பதுஞ்செய்தே
புரியுமற்றொன்றினிற்புகுந்தவ்வேள்விவாம்
பரியினைப்புரந்தரன்பற்றிக்கொண்டதும். (௬௬)

பொருவினித்தியத்துவம்பொருந்தற்குன்னியே
வருதிநான்முகனெனமாதவஞ்செயு
நிருதனைவாணியானித்திரைத்துவர்
தருதியென்றிமையவர்சாற்றுவித்ததும். (௬௭)

வீசொற்கொடுமையாற்கோளிழைத்துவெங்
கானிடையிராமனைக்கடத்திவிட்டது
மாணியுற்றிடுஞ்சுயோதனன்பண்டைவரை
மாநிலத்தினிற்பலவஞ்சஞ்செய்ததும். (௬௮)

மூவடிமண்டருகென்றமூர்த்திபான்
மாவலிநீரொடுவழங்கவந்தநாட்
டாவில்சுக்கிரன்றடுத்ததுவுமற்றுமென்
னேவலினன்றிவேறெவர்செய்வித்ததே. (௬௯)

எச்சரங்களுந்தமக்கெதிர்ந்துளோர்கண்மேற்
றச்சரந்தையையவர்தமக்குநல்குமாற்
பிச்சரங்கவரொணப்பிறருந்தூற்றவே
மச்சரனியானடுத்தவனைமாய்ப்பனே. (௭௰)

அந்தரத்தமரரிலவனிமாந்தரிற்
றந்தவப்பயனவரவர்க்குத்தக்கது
வந்தடுத்ததுவெனமனங்கொளாதுளே
வெந்தவப்பொறுமையையாவர்வெல்வரோ. (எக)

யானுமென்னருமையாமினியதேவியும்
வானுமண்ணுலகுமேவவ்வியானையு
மூனுமுள்ளுயிருமுப்புறையும்பாண்டம்போற்
றூனுகச்செயிலெவ்வாறுறுஞ்சந்தோடமே. (எஉ)

உயிரிறுமெதிரியா*லென்றுன்னுமலே
செயிருறுமனத்தராய்த்தீபமேற்செலும்
வியனுறுவிட்டில்போல்வீழ்ந்தென்மாமகன்
வயிரனுலியாவரோமடிவுறார்களே. (எங)

சென்றுமாயோனரசிங்கருபமாய்க்
கொன்றுமேயிரணியன்குடர்புனைந்ததும
வென்றிவாளவுணருமவிண்ணுளோர்களு
மின்றுமாறுறெதிர்ந்திகல்செய்கின்றதும். (எச)

பரவுமன்னவர்கிளைமுழுதும்பற்றறப்
பொருதடன்மழுவினன்றொலைத்தும்பொன்றினர்
குருதியின்மூழ்கியக்குருதியாற்றனக்
கொருதனித்தாதையார்க்குரிமைசெய்ததும். (எரு)

தன்றிறல்கொண்டுதுச்சாதனன்றனைக்
கொன்றுமேயனையன்மெய்க்குருதிமாந்திடச்
சென்றதும்வீமனத்திறமுணர்ந்துதன
மன்றலங்கருங்குழன்மான்முடித்ததும். (எசா)

இன்னபிறவும்யானின்றகாய்முனை
தன்னியலாமவன்றனையனக்ரமன்
றன்னலர்செயலெலாஞ்சுடுஞ்செந்தீயனன்
பன்னருங்கொடுமையார்பகரற்பாலரோ. (எஎ)

சூலிமாதவர்மினர்தூயகற்பெனும்
வேலியையழித்ததுமவிண்டுமோசினி
போலியைந்தருந்தவர்போதமாய்த்ததும்
வாலியையிராகவன்மறைந்தெய்ததும். (எஅ)

---

* என்பதுன்னியும் எனவும்பாடம்.

மானிலம்போற்றுகன்மாடபாதனைந்
தானுயர்வசிட்டன்முன்சாபமிட்டது
மானமேதசிகனையவ்வாசனுஞ்சபித்
தீனமாக்குவனெனப்புனலெடுத்ததும். (எகூ)

வனந்தின்முன்விருந்திடுமெவசிட்டன்றேனுவை
யெனக்குநீதருதருளென்றுகோசிகன்
கனத்தெழுஞ்சேனைகள்சூழக்கைமிகுஞ்
சினத்தொடுமெவெய்யபோர்பண்டுசெய்ததும். (அ0)

ஊருவிலடிக்கிடனுசிதமென்றெண
வீரர்சொல்கதையமர்விளைக்கும்வேளையிற்
போர்மிகுசுயோதனன்பொற்குறங்கினை
சீரமில்வீமனன்றெதிர்ந்தடித்ததும். (அக)

குறுமுனிபாற்கடல்குடிப்பித்தக்கட
லுறுமொருவிருந்திராணியொகத்தஞ்சலி
நிறுவியனைக்கொடுநிற்குமவேலையிற்
றெறுமகவானவன்சிரஞ்சிதைத்ததும். (அ௨)

சுவறவெமடாகையைநின்சுதன்வென்றனல்
னிவறவில்போழ்யெனவிராடனுங்
கவறுமெய்புழக்கிறுற்கங்கபட்டனுந்
தவறிலாவறன்மகன்றனையெறிந்ததும். (அங)

நீண்டமண்பாரமுனீக்கவந்தமால்
பாண்டுவின்மைந்தராற்பற்றலார்க்கெதி
ராண்டுசெய்வினையுமென்பேரனக்ரமன்
பூண்டுசெய்தவையலாலெவர்கொல்பூண்பித்தார். (அச)

ஆதலான்மகிழ்ச்சியையருஞ்சநதோடனைக்
காதலாமியலவிரோதக்காளையை
நீதிநாயகனொடுநீறுசெய்துநின்
பாதமீதேவனையுமபணிவிப்பேனென்றான். (அரு)

அவனஃதுரைத்தலுமாசன்றொடொழு
துவமையின்மானனென்றுரைக்கும்பேரினான்
புவனியில்விசும்பினிற்பொன்னினாட்டினி
லெவனெனக்கெதிரொருவிவையியம்பினான். (அசு)

வேறு.

வணங்குவதெத்தகையோர்க்குமாற்றுவதேயொருவடிவா
யிணங்குமெனக்குமியன்றதெத்தொழிலேனுமியற்று
துணங்குவனோவெனறானேயோர்வடிவாமென்னிலச்சை
யணங்குதனக்குமெதிர்ப்பாராருளருய்ந்தவராவார். (௮௭)

மானமிகுந்தினன்றேவந்தவடங்கைதமகத்திற்
றானவனெண்ணிலனென்றேசத்தியுமாவிதளர்ந்தா
ளானவனிந்தைபொறாதேயத்தனுமாமனையன்று
னானறவன்றலைகொய்தானும்பழையுந்துயர்செய்தான். (௮௮)

போதனையிற்சிறுபேடும்போயெதிர்கொண்டழையாதேல்
மீதயலுற்றிடுமெஞண்டுமெய்யுயிர்நீங்கும்விலங்கூ
டோதருநற்கவரிக்கேயோர்மயிர்சிக்கினுமுய்யா
தாதலின்மற்றதுகண்டாராரெனைவிட்டுளராவார். (௮௯)

தண்புனன்மாமடுமூழ்கித்தாழ்துரியோதனன்வீமன்
புண்படவேவசிகழ்சொல்லாற்பொங்கியெழுந்துயிர்போனா
னண்பொடுதாரைவிலக்குநன்மொழியுங்குறியானோர்
வண்பகைவைதல்பொறாதேவாலியுமவந்துமடிந்தான். (௯௰)

மூவரிடத்தினுமல்லான்மூன்றொருமுப்பதுகோடி
தேவர்முதற்பிறருள்ளாந்திண்புவியோர்கடிறத்து
மேவவொவர்க்கெதுசெய்கையேற்பதவ்விங்கிதமேபோ
லாவதுதாழ்க்கினுமன்றேவாங்கதுவேயவமானம். (௯௧)

யானுமிலச்சையுமைந்தனென்னுமுர்சாகனெனப்பேர்
தானுறுகாளையுமெய்திற்றாந்தியொடுந்தமன்முன்னா
மேனுவனும்பகையெல்லாம்வென்றனடிர்துணைபீதே
வானுமிம்மண்ணும்வணங்கவாகையிலைச்சுவனென்றான். ( )

வேறு.

மாமானனிவ்வாறுரைசெய்யமுன்வந்துதங்கள்
கோமானைவணங்கிநெடுந்திறல்கொண்டுவெல்வார்
தாமார்கொன்மற்றென்னையெனப்பலர்தம்முனோங்கு
மேமாசலமன்னசங்கற்பனுமின்னசொன்னான். (௯௩)

மாவாரணமேல்வருவாசவன்மற்றுமுள்ள
தேவாசுரர்சந்திரர்சூரியர்திக்குப்பால
ராவார்பிறருக்குமென்னேவலையன்றியாது
மோவாததமக்குறுசெய்வினையுள்ளதன்றே. (௯௪)

பதுமன்புவனந்நிருமிக்கவும்பச்சைமாய
னதுபின்புபுரக்கவுமீசனழிக்கவுந்தம
மிதயங்களிலெய்தியயான்புகலேவல்செய்யும்
விதமின்னமுமவ்வொருமூவருமவிட்டிலாரோ. (௯௫)

சங்கற்பமியான்முயல்வித்ததைத்தாரமாமென்
வெங்கற்பனையன்றியுமியாவர்செய்விக்கவல்லா
ரங்கப்பணியைப்பல்விகற்பமதாக்குவிக்குந
துங்கப்புதல்வன்றிறனுக்கொர்தொகுப்புமுண்டோ. (௯௬)

என்பாலன்விக்கப்பனுமியோசனையென்னுமனனுன்
றன்பாரியுருகேய்வெகுநாமுநன்றனுமாகி
நின்பாதமவணங்கியடர்த்திடினிருவிகற்ப
னென்பான்முதலோரெதிர்நிற்பர்கொலென்முனின்றான்.

விண்ணாடரில்வேதனுமாநதரிலவேநதனொன்ன
மண்ணுள்பவருமமெனுவேதவன்மருதுசெய்தா
லெண்ணுதெனதாணைகடப்பவரியாவரொன்று
வுண்ணுடியிராசதனிவ்வுரையோதினனல். (௯௮)

மன்னர்க்கெதிர்தாமதன்வந்துவணங்கியாரோ
யென்னைத்தவிர்ந்தாருலகேழினொடேழினுள்ளு
முன்னைத்தனுமென்பணிகொண்டுயிர்முற்றுமாய்க்கச்
சன்னத்தனனுலெவர்வந்துசமர்க்கெதிர்ப்பார். (௯௯)

சீராமர்தருப்பையிலேழ்நினைகுசேர்ந்திருந்துஞ்
சாராமையினுலவனோவழற்சாயகந்தன்
னேராமளவுமவருணன்னெடுநீர்மையெய்தி
வாராமலிருந்திடரியார்கொல்வரச்செய்தாரோ. (௧௦௦)

இளமைத்தமயந்தியைக்கங்குலிலெய்துகானி
னளனைப்பிரிவித்தனளிவ்வகைகானிலத்திற்
றளர்வுற்றிடவென்மகணித்திரைத்தையலாற்றம்
வளமற்றிடுமோநதர்தமக்கொர்வரம்புமுண்டோ. (௧௦௧)

தீம்பானுநற்றெள்ளமுதும்பசுந்தேனுமைய
லாம்பாவையர்போகமுமற்றுமடுத்தபோதும்
வேம்பாகவெறுத்தென்மகட்குவிருப்புறுதார்
தாம்பாருலகத்தெவரோவெனச்சாற்றினனே. (௧௦௨)

வேறு

பேருலகசத்தோசத்தோபிரமமொன்றேவிரணடோ
வோருறினரகசொறகமுள்ளதோவில்லதேயா
வாருணர்நதவர்தாமென்றையலக்குருசநதேகமென்மு
னேருறினிற்பானநதநிச்சயனகொல்லோவென்றான். (கo௩)

மாறுபாடாகப பேறுமறுமையிற்பெறுதுமென்ன
வேறுவேறாகக்கூறுமவிதணடவாதிகளேயெல்லா
மூறிலாச்சாருவாகனொடிமாதர்போக
மீறிலாக்கதியென்றேதியிடுறபபுரிவனென்றான் (கoச)

உருவமவேதனைகுறிபபுபாவனையுயர்விருஞானம
வருமுறைகெட்டுசெகெட்டுமெய்வதுமநதமுற்ற
வெருவுறச்செடுதலின்பவீடெனச்சொல்லிமாறுரர்
பொருசமர்தொலைபபனெனனபபுததவ்வநதிலையசொன்னான். ()

நீநதருஙகடல்போலநிறைநதிதாலவினைகளெல்லா
மாநதுதலசெய்தசெய்துமறறவைதொலைநதபின்னர்ப
போநதுபொனனெயில்வட்டததுபபொருநதுதன்முத்தியென்றே
காநதியொன்னலராபபோரிற்கடவனென றருகன்சொன்னான். ()

ஞாலமயாவினையுஙகாக்குஙளனடிவிளக்குமபோது
சீலமோர்திணையின்பாதிசிதைநததேதீதாய்கொண்டு
சாலநீள்வனததிறபோகததள்ளினெனனிலென்னப
போலெலவர்புரிவமென்னபபுறஙகுவெஙகலிசொனனானல. (கoஎ)

கெடாதுலகினையாணீதிகிளரரிச்சநதிரற்கீ
தடாதெனவறிநதுமபண்டோரணகஞற்புலைச்சிமாதர்
படாமுலைத்தடததினெறேபடியெனபபகர்வித்தேனல்
விடாமுரட்குதர்க்கனென்னைமெளனஞேவெல்வனென்றான். ()

வேறு.

தத்தந்திறலும்பெருமேன்மையுஞசாருவாகன்
புத்தன்சமணன்கொடிதாகியபோர்க்கபால
னித்தன்மையரும்பிறருநதமமினத்தொடாங்கே
மொய்த்தங்கரசற்கெதிர்வந்துமொழிநதவேலை. (கoகூ)

வேறு.

மன்னவனதிமாமோகன்மருங்கொராதனத்தினோர்பா
வன்னவன்படைஞர்க்கெல்லாமதிகனுயுறையாங்கார
னுன்னருமீன்கள்யாவுமுதித்தபினுதிக்குந்திங்க
ளென்னவங்கவன்றன்மேன்மைமியம்புவானினையசொன்னுன். ()

தேகாபிமானம்பற்றியானெனுஞ்செருக்குத்தானே
போகார்தசுருபமாகுமென்னுனுமபொருளேயீட்டி
மாகாதலவைமேல்வைத்தீதெனதென்றல்வடிவாயார்க்கு
மேகாவென்னகந்தையானுமெவர்கொலேமாப்புறுரோ. (கககூ)

பேரினும்பெரியன்மிக்கபிறப்பினும்பெரியன்செல்வச்
சீரினும்பெரியன்கல்வித்திறத்தினும்பெரியன்றெவ்வர்
போரினும்பெரியன்மற்றெப்பொருளினும்பெரியன்யானே
யாரினும்பெரியனென்னுமென்னையாரடர்க்கப்பாலார். (ககஉ)

வாசநாண்மலருளோனுமாயனுந்தமமைத்தாமே
பேசினர்பெருமையென்றுபின்ஞகனடக்குவான்போ
லாசறுமென்பாற்காண்டிரடிமுடியார்க்கும்யானே
யீசனென்றுனாத்தானென்னிலேவமொன்னியல்புறுதார். (ககங)

ஈசனென்றொருவர்யாரோவெம்மையல்லாமலென்ற
வாசவனாவரன்றோவந்துபாரிடத்தின்மேனு
ளாசறுதருமன்வீமனருச்சுனனகுலன்பின்னும்
பேசுசாதேவனென்னப்பிழையுறுமைவரம்மா. (ககச)

உருடைய்தாரகத்தினுட்பொருள்யாதுசொல்லென்
றருகில்வேதாவையுந்தனங்கையாற்சிரத்திற்றக்கிக்
குருவெனுந்தாதையார்க்குங்குருவெனக்குமரவேளாற்
றிருவுபதேசம்யாரோசிவனுக்குஞ்செய்வித்தாரே. (ககரு)

கவுசிகமுனிவன்றன்னுற்கமலநான்முகனேயாதி
புவனமன்னுயிர்கள்யாவும்புகுந்துயான்படைப்பனென்றே
யவமதித்தனுடமுன்னுமைந்துநாட்டென்பாற்றிக்கி
னவையறப்பயில்வித்தோனுநானலதொருவன்யாரோ. (ககசு)

ஆனநல்லருந்தவஞ்செய்தயன்முதற்றேவர்தம்மா
லூனமில்வரமுங்கொண்டெவ்வுலகமுந்தான்பெற்றீசன்
யானலதெவன்கொலென்னுவிரணியனிராவணுதி
தானவர்தமைச்சொல்வித்ததன்மையென்வன்மையாமே. (ககஎ)

அமைவுறுதெழுந்துபொங்கியாரினுங்கீழோரோனுந
தமைமிகத்தாமேபேணிச்சங்கியாதெவர்முன்னேயு
மெமதியாமெமக்கொடாபோவவ்வீசனுமென்றென்றேவி
மமதையாலென்னலியாரோமாநிலத்துரைசெய்யாரே. (ககஅ)

ஏந்திழைமமதைதானுமியானுமவந்தெய்திலென்முன்
சாந்தியுஞ்சமனுநிற்குந்தரத்தரோதறுகண்வெங்கை
பாய்ந்திடிலும்புங்கொல்லோபசுவும்போர்விடையுமெங்கு
மாந்திறநினக்கேயாக்கியறிவெலாந்தவிர்ப்பனென்றான். (கக௯)

இவ்வகையெவருந்தத்தமிகல்வலியெடுத்துக்கூறு
மவ்வயின்மோகவேந்தனகமொடுமுடல்பூரித்தே
தெவ்வலிபடைஞர்தம்மாற்செகுப்பனென்றுயர்விவேகன்
மெய்வலிதனையெண்ணமல்வியப்புடனிருந்தவேலை. (க௨0)

காமனாதியர்வீரலாபச்சருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ககஅஅ.

---

## உஎ - வது, நிருபகாதியர் வீரலாபச்சருக்கம.



வேறு

நெறியெலாமொருநொடியினீதிநாயகனமுடுகி
யறிஞர்கோனடிபரவுமளவிலங்கவனினைவி
னுறுதியாததுபுகழைம்முரிமையோதன துயிர்கொ
றறுகணினிதினைவதருவதாயினனெனவே. (க)

வள்ளலங்கதுவினவமண்டுதண்டனையில
தெள்ளுமென்கழையுமதியிலருந்தருபயன
துள்ளதென்றெவர்புகல்வரோதுமின்சொலினனையர்
கள்ளநெஞ்சொருசிறிதுகனியுறுந்தகைவருமே. (உ)

ஏதுநானினிமொழிவதியல்பிலானுயிர்தொலைய
மோதினலலதுமுரண்முடிவுறுந்தவைகருதி
யாதிநாயகவெழுதியமரதேயறுதியென
நீதிநாயகனெனுநியாயனீதுரைசெயவே. (௩)

நன்றுநன்றெனவினவிநகையுமேசிறிதுவா
மன்றலம்புயநிமிரவனசமாமுகமலர
நின்றதன்புடையிலுறைநிருபகாதியர்களொடு
மின்றுசென்றமர்புரிவனென்றுளம்பதறியெழ. (௪)

எழுகடம்படைஞரொடுமிறையவன்சரணமலர்
தொழுதுநின்றநுகிலுறைதூயபோர்வலரொருவரு
முழுவதும்பகைவலியைமுடிவுசெய்யுனதடியர்
குழுவிருந்திடவுமெழிற்குணமதன்றெனமொழிய. (௫)

உரைசெய்தாருரைவினவியுயர்விவேகனுமனைய
விரைசெய்தாரவர்கடமைநோக்கியேவெறுபட
வருபதாகினிகளொடுமாரனுதியரவலா
நிருபகாதியர்புகன்மிகுமொழிவாறியல்வினை. (௬)

நிருபனாங்கிலைவபுகலநிருபகாமெனுமுழுதுருவ
மருவுகொண்டெவனெருமைபுகொணடெனையடர
வருவனியமெகனிழுமெழிமல்லவதாயகவனையொரு
பொருளெனன்றெனவெநதுபுகலுகின்றனனிவையே. (௭)

வேறு.

விழைவுறத்தரும்பொருட்குளிழிவெலாமவிரித்தன்
பிழைதெரிந்தமெசாநபமானவென்பொலதொடும
வழுவதறகுருமலைக்கண்வாய்த்திப்பதிமாதொடு
மெழுமடறபுவிக்குளார்கொலிகலிவெல்லுமியல்பரே. (௮)

காமனுக்குவனமைமாதரன்றிவேறுகண்டதுண்
டாமெனச்சொல்வாரியாவரனையர்பெண்மையறிவிலாப்
பாமரர்க்கலாதுணர்ந்தபார்க்குமெமமறேர்க்குமே
மாமயக்குமெனதவாறுமதிபுகுத்துமவண்ணமே. (௯)

எழுகுறும்பிபெருகுநாமதவள்ளையென்பரிசழ்கரும்
புழுவடர்ந்தகுழலிருண்டபுயலதென்பர்பூளைநீ
ரொழுகுமணகள்குவளையென்பர்தரளமென்பருயிரொடும்
பழுப்புறும்பல்லெனம்பரின்னபகர்வதென்னபாவமே. (௧௦)

எச்சிறங்குவாய்விளிமபுபவளமென்பரொழுமிரண்
டச்சிலந்திமொங்கையானையாகுமென்பரதுபெருங்
கச்சிலங்கிருந்துமாவிகவுருகின்றதென்பராற்
பிச்சிலங்கவர்க்குநேர்பிராநதரியாவர்பேசிலே. (௧௧)

நாசிபூறல்கோழையெச்சிறுமாமுகத்தையே
மாசுறாதபூர்ணசந்த்ரவட்டமென்பரொட்டுவைத்
தேசுறுநரம்பினைக்கொடென்புகட்டமைத்ததோள்
வீசவீசநெஞ்சழிந்துவேணுவென்பர்காணுமே. (௧௨)

குடர்நரம்புதசைவழும்புகுருதியென்புசுக்கில
முடைகிடந்தபொதிமேலோர்தோல்விரித்துமூடியே
யடர்வுறுமபல்துளைகடோறுமருவருப்பாறுமலம்
படர்தல்கண்டுமதனையேகொண்மகளிரொன்றுபகர்வதே. (கங)

வேறு.

கூராருமவேல்விழியார்கோலாகலங்களெல்லாந்
தேராதசிந்தையரைச்சிங்கிகொள்ளுமல்லாம
னேராயுணிற்குநிலையுணர்ந்தார்க்கரும
மாராய்பவருக்கருவருப்பதாய்விடுமே. (கச)

வாலவயதின்மயக்குமடந்தையருங்
காலமகன்றதற்பின்கண்டெவருமேயிகழ
நீலநறுங்குழலுநிட்டழகுநீங்கியவர்
கோலதொருகையூன்றிக்கொக்குப்போலாயினரே. (கரு)

கிட்டாதகன்மின்கிடப்பதிற்பொல்லாங்கென்
றிட்டாரலரோவிலங்கிழையார்தம்முடம்பிற்
பட்டாடைமேல்விரித்துப்பாதாதிகேசாந்த
மட்டாய்மறைத்துவருமார்க்கமதுவென்கொண்டோ. (கசு)

வீசியதுர்க்கந்தம்வெளிப்படுந்தம்மெய்யிலெனக்
கூசிமறைப்பதன்றேற்கோற்றொடியாரங்கமெங்கு
நாசிமணக்கநறுங்குங்குமசுகந்தம்
பூசிமுடித்தல்பசிபோக்குமபொருட்டேயோ. (கஎ)

மாற்றரியதமமுத்தைவாய்திறக்குமுன்னமெழ
நாற்றமறைக்கவன்றோநாவழித்துப்பல்விளக்கிக்
கோற்றொடியார்நன்னீருங்கொப்புளித்துப்பாகுசரு
மூற்றுவதுமென்குதலைதீர்க்குமருந்தென்றேயோ. (கஅ)

பட்டாடைசாத்திபபணிமேகலைதிருத்தி
மட்டாயவயவங்கண்மற்றவைக்குமேற்கும்வண்ணங்
கட்டாணிமுத்துங்கனகமணிப்பூடணங்க
ளிட்டாலலதவருக்கென்றோவியலழகே. (ககூ)

சனகர்முதலோர்பிருங்கிதத்தாத்திரேய
ரனுமர்சுகர்நாரதனூரானதுருவாசர்
புனிதசடபரதர்போதாயனரொன்
றினையர்தமைமாதமொழினலமென்செய்ததுவே. (உ0)

வீடுமனைப்பண்டோர்வியன்மடந்தைதன்முலையிற்
கூடும்வகைக்குத்தருகுருவானுமைசெய்வித்தும
பாடுமிகப்பட்டபரசுவை யானைக்கோடம
ராடுதல்செய்வித்துமுண்டோவங்கசனார்வென்றதுவே. (உக)

ஒருமனையாளென்னுந்தியெனுமொண்ணுதலாள்
பாருகிற்பைமறிக்கும்பார்வையினுண்மேனைக்கிற்
றீருமடவாருடலிச்சேயிழையாளைச்செருக்கிற்.
போருடலுங்காமனெனுங்கேபொன்றுதிருக்கவல்லான். (உஉ)

ஏசவருவேளையிரதியொடியான்றுலைத்து
யோசனையைக்கற்பனையையுந்தியினற்போர்மாய்த்து
மாசுறுஞ்சங்கேதகனையென்மைந்தனெனுநிச்சயனு
னேசமுறச்செய்வனினிநானென்றிவையுரைத்தான். (உங)

வேறு.

நிருபகனிவயுனாநிகழ்த்துமெல்லையில்
வருபொறையெழுந்தனன்பகிமறுளனைக
குரைகழல்வணங்கிவெங்கோபனுருயிர்
பருகுவனென்றிவைபகாதன்மேயினான். (உச)

பிறர்வெகுண்டியறறுமெபபிழையுமுட்கொளாப
பொறைவடிவாகியவெனக்குமென்பொறைத
நிறனைவற்புறுதகலேதேகமாயென்பா
லுறைமரியாதைக்குமொருவரொப்பரோ. (உரு)

வைதவர்தமமையுமவாழ்தநித்தம்வயிற்
கைதவமபுரிநதறக்கடியதானவை
செய்தவர்செயலையுநதேர்வுறுதவென்
மெய்தருமென்மைபோன்மென்மைவேறுண்டோ. (உசா)

பொதுவதுவாம்பரமபொருளின்செய்கைபோ
லெதுவெதுவெவரொவர்க்கியன்றதென்றுதேர்ந
ததுவதுவவரவர்க்காயிருக்குமச்
சதுரதுபோலெதுத்ருவதின்பமே. (உஎ)

காய்தறுகண்ணராங்கயவர்கைமிகத
தீதுறும்வாசகஞ்செப்பினுமெதிர்
வாய்திறவாமையாமௌனமன்றிவே
றேதனைவெல்வதற்கியன்றசெய்கையே. (உஅ)

முனிவெனுங்கொடுந்தழன்மூண்டபோததிற்
பனிவருந்தண்புனல்பரவினுலென
நனிமுகமலர்ந்துமாநகைபுரிந்துநல்
லினியசொல்லவர்க்கெதிரியம்பல்செய்வனே. (உகூ)

சோதினல்லின்சொல்யான்கூறும்போழ்தினும்
தீதெனும்வடிவினர்சினம்வந்தென்வயின்
மோதினுமவர்க்கெதிர்முனிதன்மாற்றியே
யீதெனதனுபவமென்றுங்கொள்வனே. (௩0)

ஓதருமலசலமுச்சிட்டாதியில்
வேதனைசெய்துதன்மெய்யிற்புண்பட
நோதல்செய்தகழ்ந்ததுநோக்கியெங்ஙனம்
பூதலமுனிந்ததிபுவனத்தோனையே. (௩௧)

தன்னபிமானமாங்கைதயல்கோவென
மன்னவையுடவள்வனைந்தழுந்துகி
லுன்னிடுஞ்சுயோதனனுரியநோக்கியு
மன்னதற்கென்செய்தானறத்தின்பாலனே. (௩௨)

நன்னகைநலகமுகமலர்ச்சின்மொழி
மன்னகமகிழ்ச்சியிவ்வகையயாவையு
மென்னதுசின்னமாயிருத்தலாலவை
யன்னவெவ்வெகுளியையழிக்கற்பாலவே. (௩௩)

வந்தவர்வாழ்த்தினும்வசையுரைச்சினுஞ்
சந்தனம்பூசினுந்தசையைக்கொய்யினு
முந்துறுவினையினன்மூண்டதாமெனச்
சிந்தையிலுன்னியச்சினத்தைவெல்வனே. (௩௪)

ஒருமையுளாமையேபோலொடுக்குமைம்பொறிப்
பெருமைநல்லறிஞர்பாற்பெறவுநல்கிமேல்
வருமதன்செருக்கையுமடிக்கவல்லனு
லருமைசெய்குணத்தனென்மகனடக்கமே. (௩௫)

கனவிலும்வருமவமானன்கண்ணுறு
வனருகனவமதியாயினேனாயு
நினையுமுன்செருப்பணிந்நிலத்தெல்லோருந்தம்
மனமகிழ்மற்றுமோர்யகன்சன்மானமே. (௩௬)

உவமையின்மென்மையெவ்வுயிர்க்குநாடொறு
நவநவமாய்மிகநல்கிநண்ணலா
லவமரியாதையையழிக்குமாலருந்
தவமரியாதையாமென்னுந்தாரமே. (௩௭)

என்றிவைமொழிந்தியம்புமெல்லையில்
வன்றிறன்மன்னனைவணங்கிமுன்புற
நின்றடல்விராகனைநெடியமேலாபனை
வென்றிகொணிருநிறம்விளம்பன்மேயினான். (௩௮)

வேறு.

எப்பொருளையாயினுமிகந்துவிடலேமேயார்
மெய்ப்படுவமாமெனையுமப்பொருளின்வேட்கை
நப்புறவிடுத்தலொருதன்னுருவமாமென்
றொப்பருமவிரத்தியையுமியாருலகில்வெல்வீர். (௩௯)

வேறு.

பயிற்றிக்கொடுங்கள்ளர்பயமுண்டுபொருளோர்க்
கயில்வாய்த்தடக்கையச்சமரசர்பாலவர்க்குண்
டுயிர்வேட்டவர்க்குண்டுறுங்காலபயநம
வயிராக்கியர்க்கேதில்வருமங்கொர்பயமே. (௪0)

பேராசையாளினர்பின்சென்றுமன்றுந
ணீரத்தமிழியாளர்சிலர்பாரிலுண்டே
நேராகவரில்வாழ்வுநினையாமல்வருநால்
வாராததார்தாமவருந்தினுமவராதே. (௪௧)

அடுக்கானிறுமபோதிலார்ச்சித்தபொன்பூண்
வடித்தானிலாவாழ்வுமனைமற்றுமெங்கே
யெடுத்தான்விழைதால்விழாதேயிருக்கத்
தடுத்தாலுமங்கோர்தலைச்சுமையிராதே. (௪௨)

புன்பாவிவாறென்புலர்ந்தாலுமெய்வெள்
ளென்பாயுருந்தாலுமில்லாமையென்னும்
வன்பாடுநல்லோர்கள்வாய்விண்டுதன்மே
லன்பாளர்தமபாலுமறியச்சொலாரோ. (௪௩)

அண்டாதபேராவலமையாததென்னே
விண்டாவுமலைபோலவேண்டுங்கொல்வெண்சோ
றுண்டாலுமவயிறுள்ளதொருசாணிதற்கோ
கண்டார்கள்பின்சென்றுகையேற்குமாறே. (௪௪)

கனிகாய்கிழங்குண்டுகானத்தினன்னீர்
நனிமாநதியிலுண்டுநாமுண்டுவைகத்
தனியானமுழையுண்டுதவஞானநெறியுண்
டினிதாகியெப்போதுமெம்போதுபோமே. (சரு)

அடலோபனென்பானைநுசெய்கையென்பாற்
றொடராதிவ்வண்ணந்தலைநதெவ்விரத்தித
திடமானமனையாடிநங்கொண்டுசுற்றத்
தடன்மேவுபந்தங்களொழியச்செய்வேனல். (சசா)

புக்கவழியூடொருவருக்குமிலர்போம்போ
தொக்கவருவாருமிலருற்றாடுவின்கட்
டக்கதொருதாயர்கிளைதந்தையுடன்வந்தோர்
மக்கண்மனைசுற்றமெனவந்தவிவர்தாமே. (சஎ)

அன்புற்றுமாதாபிதாவென்னுமவர்தா
முன்பெற்றசென்மங்கண்முடிவில்லையவைதோ
றின்புற்றதாய்தந்தையெங்கேயதன்றே
பின்பெற்றபேரும்பெறத்தக்கபேறே. (சஅ)

பூமேலவர்க்குள்பொருட்குரியாரோர்
நாமேயெனுந்தமர்நயந்தெவர்பகுந்தார்
நோமோருடம்பின்கணேயையதனாலே
தாமேயல்லாதெவர்தமக்குரியார்தாமே. (சகூ)

சடமீதுகிருமிப்பைதானென்றன்மலமோ
டிடர்மேவுபுண்ணேடெபுக்கண்டதுண்டே
யுடன்மீதிவ்வுடல்போலுதிக்கின்றமுறைவத
திடமானமகவென்றுசீராடலென்னே. (ரு०)

ஊறுதுயருஞ்சுகமுமுற்றனுபவிக்கும
பேறுபெறுதன்னுடலுமாவிபிரியுங்காற்
கூறுசிறுபுள்ளெழுகுடமனையெனவப்பால்
வேறுபடுமென்னிலினிமெய்யுறவுயாதே. (ருக)

துறவிற்சுகம்போலொர்சுகமில்லையென்றே
பெறலுற்றவாழ்வைப்பிறர்க்குக்கொடுத்தப
புறமுற்றகானிற்புகுந்தின்பமுற்ற
றறமுற்றபார்வேந்தரளவற்றபேரால். (ருஉ)

காதிக்குமகமன்னர்வாழ்விற்கொல்கற்ருேர்
சாதிக்குநெறியிற்கொறருமின்பமென்றே
வாதித்துமேனுள்வசிட்டாக்குமுன்போய்ச்
சோதித்தகனமேருசுகபபேறுதாமே. (ருஙா)

அம்மாலயன்றிஙகளணிவேணிமுக்கட்
பெம்மானளிக்கின்றபெருவாழ்வுமுற்று
மெம்மால்வரபெற்றவினைதலைதயொப்பாய்ச்
செம்மாநிலத்திற்சிறப்புற்றதனறே. (ருச)

உடலோடிறக்கின்றவோடன்றனக்கோர்
மிடலோவெம்மோடிருகுவெமபோர்விளைத்தற்
கிடரோசுகத்தோடெதிரக்கின்றநெறிநீர்க்
கடலோடுகிணறேகதித்தார்பபதென்றுன். (ருரு)

அவ்வாறவன்சொல்லுமளவின்கணரசன்
செவ்வாய்மொழிநதன்னுசெங்கட்குறிப்பா
லெவ்வாறுநின்செய்கையெனவோடுமெவரு
மொவ்வாதசநதோடனுசெய்துதானுன். (ருசு)

வேறு.

வந்தாலுமோர்பொருள்கைபபுகவாராவிடினுஞ்சீர்
நந்தாதமனபபூரணம்வடிவாகியநானு
முந்தாதரவாற்பெற்றமைகொண்டின்புறலுருவாங்
கொந்தார்குழலென்றேவியுமவரிலார்விறல்கொள்வார். (ருஎ)

நன்றுநதியநெஞசத்திடைநாடித்தெளிவுற்றே
யென்று தனிநிலைபெற்றிடுமின்பப்பொருளுடையார்
துன்றுமபெருவெள்ளத்திடைதோன்றுங்குமிழியைப்போற்
பொன்றும்பொருளையுமேயொருபொருளாய்நினைவாரோ. (ருஅ)

துன்பத்தினையின்பத்தினுஞ்சுகமாமெனமகிழு
மென்பக்கலினடன்மச்சரனிகல்செய்குவதெவ்வா
றனபுற்றிடுகடல்வாயமுதவ்வானவருண்ண
வன்புற்றிடுவிடமுண்டவர்க்கிடரார்செயவல்லார். (ருகூ)

மழுவும்பிணையொடுபொங்குமதயானையும்புலியுஞ்
செழுவெங்கனலிடையேவரமுயலுஞசிலமுனிவோர்
வழுவங்கறவவன்மேற்செலவருவித்தவையன்றே
தழுவும்படிமகிழ்ந்தேற்றதுந்தான்பூண்டுடுத்ததுமே. (சுo)

முந்தோர்மணிமுடிசூடமுயன்றெய்தியபொழுதும்
வந்தோனதுதவிர்ந்தேசடைமகுடம்புனைபோது
மந்தாதிருமுகமோவிபத்தலர்தாமரைபோலுஞ்
சந்தோடவிராமன்செயறானென்செயலன்றே. (௬௧)

பிறர்செல்வமுநம்பெறெனப்பிடிப்புள்ளவெம்மிடத்து
நெறியல்லதுபுரிமச்சரவிற்குநிறனுளனே
வுறுசெங்கதிரெதிரேயிருளுடன்றெய்துவதுண்டோ
சிறுகுஞ்சரம்பாளிக்கெதிர்சென்றேறுவதன்றே. (௬௨)

யானேயினியிகன்மச்சரனென்பானுயிர்தொலைத்துத்
தீநேரவனசூயைக்குமென்றிருத்தேவியைச்செலுத்தி
யானேயருள்பொழியற்புதயனைக்கொண்டிம்வல்லமரிற்
றானேகொலைசெய்விபடணந்தலைநாசனையென்றான். (௬௩)

வேறு.

அன்னவனிலையசொல்லுமளவைபிலருள்விவேக
மன்னவனருகிலெய்திமானனையிலச்சையோடுந்
தன்னதுமென்மையாவுந்தகர்த்துயிருண்பனென்று
வுன்னருநதாநிகேள்வன்றமனிலையுமைப்பதானான். (௬௪)

பொங்கியபாலில்வார்த்தபுனலுமும்மதமுமபாய
வங்கெழுமத்தமாவையடக்குமங்குசமும்போலத்
தங்கியகருத்துள்விமலிந்தானிமிர்ந்தெழுந்தமானன்
மங்குறச்செய்யுமிங்கென்வன்மைபோன்மற்றொன்றுண்டோ. ( )

மதுரையிற்பரமன்பண்டுவையைமண்சுமந்துமாற
னதிர்வுறப்பிரம்பாற்றாக்குமடிபட்டும்வளையல்விற்று
மெதிரிலாப்பாணற்காகவிந்தனஞ்சுமந்துமானன்
சதுரழிந்திடமுன்செய்ததன்மையென்வன்மையாமே. (௬௬)

சோரமாய்வெண்ணெயுண்டுமத்தடிபட்டுச்சோர்ந்து
மூரிலானிரையைமேய்த்துமுரலிடைக்கட்டுப்பட்டுஞ்
சாரதியாகிப்பார்த்தன்றனதுதேர்விடுத்துங்கண்ணன்
பேரபிமானந்தீர்ந்தபெற்றியென்பெற்றியன்றோ. (௬௭)

உடலொருசுமையாயுன்னியுயர்வத்துநோக்குமேலோ
ரிடரிதுவென்றுமானமிதுவென்றுமீனமென்றுந்
தொடர்புறிலஞ்சுவாரோதுன்னுகற்பாறைமேற்பந்
தடைவுறத்தாக்கிற்பாறையதனுக்கோர்சிதைவுண்டாமோ. (௬௮)

இலச்சையைத்தாங்கி தன்னாலீடழித்தியல்பின்மானன்
புலைச்செயல்யானேமாய்த்தென்புதல்வனால்விடயானந்த
னிலைச்செயறவிர்ப்பனென்றுநிகழ்த்தினனன்னவேலைத்
தலைச்செயல்வணக்கமாக்கிச்சமணிவையுரைப்பதானான். (சாகூ)

வேறு.

அறிவாமென்னுநல்லவமைச்சாலகமென்னுந்
திறலார்மன்னன்றீவழியின்கட்செல்லாமே
பொறிவாயைந்துமபொத்தியடக்கிப்புகுநுந்நன்
னெறிவாயேகச்செய்குவதிங்கென்னெறியாமால். (எ0)

உடல்வாய்கண்மூக்கூர்செவியைந்தாலுயர்வேழ
மடைவாகுஞ்சேல்விட்டிலொடேவண்டசுணம்போற்
கெடவாதிக்குந்தெவ்வருமுண்டேகௌடேசன்
றொடராமற்றன்னுண்மைசெகுக்குந்தொழிலோர்க்கே. (எக)

புந்தியதாகுமெய்க்கருவூலமபொருளைச்சென்
றிந்தியமாமைந்தகள்வர்கள்கொள்ளாதெதிர்பேணி
தந்திடமாகுஞ்சேமமதற்குட்டாபிப்போ
ருந்தியஞானச்செலவநிலைக்கீறுளதாமோ. (எ௨)

ஓங்காமற்றம்முட்புலனைந்துமுள்ளூடே
வாங்காநிற்போர்க்கெத்தனைசெல்வமவந்தாலு
நீங்காவாலப்பக்குவமென்னுநெறிநில்லா
வாங்காரபபேயெங்குளதாமோவறியேமால். (எ௩)

ஏமதுறுசெல்வமெம்பொருளொன்றேயோமாக்கு
மமதையங்காரற்கினியாடன்வலியெல்லாங்
கமையுறுமென்கட்சாந்திதிருக்கட்கடைநோக்க
மமைவுறுமுன்னேயல்லதுபின்மற்றவையுண்டோ. (எ௪)

முகமுகமுன்னேயென்மகனாகுமுழுஞானத்
தகமுகன்வீரஞ்சொல்லுவதோவாளரியோடோர்
புகர்முகவேழம்போர்செயவந்தும்புகுமோவவ்
வெகுமுகனென்பானேனெதிர்நிற்குமவிறல்வல்லான். (எ௫)

ஆங்காரன்றன்னாற்றலையின்றேயமரூடே
வாங்காநிற்குஞ்செய்கைவிளைத்திம்மருண்ஞாலந்
தூங்காநிற்குந்துன்னிருண்மாய்க்குஞ்சுடர்போலத்
தீங்காறச்செய்விப்பனிதேயென்றிறமென்றான். (எ௬)

வேறு.

இத்தகையவன்சொலவியற்சுமதிநாதன்
சித்தமகிழ்த்தனதுசெங்கைமலர்கூப்பிச்
சுத்தியெனுமோர்மணிவிகோயுமணிமார்பன்
சத்துவனெடுத்தினைதான்மொழிவதானான். (எஎ)

வேற்றுயிர்கள்யாவினுளுமேயுறினுமொன்றாய்த்
தோற்றியழிவின்றியொளிர்சோதிதனைநாரு
மாற்றும்வகையின்றியறிகின்றவகையாயே
சாற்றுவதுயாவததுசானெனதுஞானம. (எஅ)

மேதகுபலஞ்சிறிதும்வேட்டுமுயலாதே
யோதியவிருப்பினொடுமோர்வெறுப்புமுறாதே
மூதுலகியாவினுளுமுற்றியாற்றில்லா
வேதமறுமியாவததுவென்கருமமாமால். (எகூ)

ஓவறுமகங்கதையொடுமோர்விருப்புமற்றே
தாவறுமசித்திசித்திகம்மிலையாதே
மேவியமுயற்சியொடுமிக்கதிடமுற்றோன்
யாவனவனேபுவியில்யான்மகிழ்கருத்தா. (அ0)

ஆதிவருகாரியமகாரியமிவற்று
ளோதுபிரவிர்த்தியொழிவோடபயமச்ச
மோதுமொருபந்தமொடுமோட்சமறிவிக்கும்
யாதுளதுஞானமதுவென்மதியதாமால். (அக)

ஒத்தமனமிந்திரியமோதியபிராண
னத்தகையவானதொழிலத்தனையுநன்றாய்
வித்தகநல்யோகமதில்வேறுதரிப்பிக்கு
மித்தகையயாவததுவென்றிருதியாமால். (அஉ)

முன்சொலுமிடத்திலதுமுற்றும்விடமொத்தே
பின்சொலுமிடத்திலதுபேரமுதமாகி
வன்சுருபமற்றவன்மதித்தெளிவிலுண்டா
மென்சுகமதாகுமெனவித்தகையசொன்னான். (அங)

தாமதனிராசதனெனுந்தகையர்தந்தந்
நாமமுமகற்றிமுழுஞானியருளத்தே
யெமுறவிருப்புடனிருப்பனெளியேனென்
மாமணிவிநற்பெருமையாரறியவல்லார். (அச)

அந்தணர்பாதந்துளவமான்கிடையுயர்ந்தோர்
புந்திநதிதீரமிகுபுண்ணியதலஞ்சேர்ச்
செந்தழலிலுற்றிடைசெறிந்துகொடுமோகன்
றொந்தவினையங்கதுதுறந்திடவல்லாளே. (அரு)

மூவர்பிரமாதியருமுப்பதின்முக்கோடி
தேவருமருந்தவருமற்றுமுளரோரோ
ரோவருமியற்புனிதையெங்குறைவளங்கே
யர்வர்நடியென்னிலினியாரவளைவெல்வார். (அசு)

துங்கமாபிடாசுரனுடற்குருதிசோரச்
சிங்கமிசையேறினள்செருந்தகைதையேபோ
லங்கவளகிர்ந்நிபெறசுத்தனெனலாவான
பங்கமறவேயுயிர்பறித்திடவல்லாளே. (அஎ)

அல்லறவெழுமபாரிதியென்னவறிவில்லார்
சொல்லறவுமெய்யெதிர்துரந்தெதனருமைநந்த
னல்லறனதன்மனையனேகாநநிநடுங்கக்
கொல்லறனியற்றையெவ்வரில்யாவர்துகொள்ளார். (அஅ)

வேறு.

என்றிணையனபலவெடுத்துச்சந்துவ
னின்றியமபதிமந்திரபாண்கேட்புறக்
கன்றியநலங்கனக்கடியுமபோர்வலித்
தன்றிறமியற்சமாதானஞ்சாற்றினன். (அகூ)

திமிரவெங்களிற்றினுஞ்சிற்றெறும்பினு
மமரபவனுருவமொன்றனுவுமேருவுஞ்
சமமெனக்குறிக்குமென்றன்னுடார்கொலோ
வுமிழ்சினப்பகைஞராயுறுமவிரோதமே. (கூ0)

என்பவையவன்பகர்ந்தேகுமெல்லையி
லன்பருக்கருள்செயுமறிஞர்தம்பிரான்
மென்பதம்வணங்கிநல்விருத்திநாயகி
தன்பெருமங்கள்வனுந்தவனிதோதினன். (கூக)

வாணியாரிறைக்குமோர்மலர்ச்செந்தாமரைக்
காணியாள்கேள்வர்க்குங்கங்கைசூடிய
வேணியார்தமக்குமேல்வீட்டுக்கென்னிய
லேணியாலலதவர்க்கேறற்பாலதோ. (கூஉ)

காவல்காட்டுதல்துடைத்தழித்தல்கற்றுடை
மூவரான்முனிவரர்முத்தரானதுஞ்
சாவருமானுடர்சதமகாதியாந்
தேவரானதுவுமென்செயல்கொண்டல்லவோ. (கூங)

தொன்மையாமருந்தவந்தொடங்கியாங்கதி
னன்மையாலுறுபயனனுகலின்றியே
யின்மையாமியலறமியற்றித்தம்புய
வன்மையாலியார்கொலோவாழ்ந்துளார்களே. (கூச)

சொல்லருந்தவத்தியற்சொல்லற்பாலதோ
செல்லருந்தீதுறைசெய்தபோதினு
நல்லருமிவ்வுறைநன்றுநன்றெனப
புல்லரும்படைத்தனர்பொருளுமவாழ்வுமே. (கூரு)

மாதவத்தோருளமதிக்கிற்கற்பக
மோதுமைக்கடலமுதுமபர்மாதர்வான்
மீதினிற்குரகதமவெள்ளிபத்தொடிப
பூதலத்தினும்வருஞ்சுவர்க்கபோகமே. (கூசா)

பாலகனொருவனென்பரோபகாரனைப
போலருளெவர்செய்வார்புரிநதமாதவந்
தாலவன்பெறுபயனன்றியாவிருஞ்
சாலவிநிலததெவர்தமக்குமீவனல். (கூஎ)

வன்புறவொன்றினுக்காகவாளின
லென்புறத்தசையரிநதீநதுபின்றலை
முன்புறவிருநதவன்முயற்சியென்மக
னன்புறுநதிறத்தலதார்கொல்செய்துளார். (கூஅ)

மண்ணியவுலகினின்மற்றையண்டத்துந்
திண்ணியவெனதொருசிறுவனில்லையேற்
புண்ணியமெனப்பெறும்பொருளுஞ்செல்வமு
மெண்ணியமேன்மையுமெவர்க்குமில்லையால். (கூகூ)

பரத்துரோகனையருட்படைகொண்டென்மக
னுரத்தினல்வதைத்துவேளொடுதன்றேவியு
மரற்றவேயவர்விடயானந்தன்றனைக்
கரத்துவாள்விதிர்த்துயிர்களைவன்யானென்றான். (க00)

வேறு.

ஆனிறந்ததொருகன்றினுக்குமணிவந்தசைத்தபொழுதருமகன்
ருனிறந்திடல்புரிந்தமாமனுவையாதிமன்னர்நெறிதன்னில்வாழ்
பானிறந்தருமென்மனைவிதீதியொடியானுமெய்தியதிபாவியா
னிறந்திகழுமக்ரமன்றனுயிர்கொள்வனென்றனனியாயனே.

நேயமென்கனுடைமாமயித்திரிதன்னீர்மையக்கொடற்கெ நறியிலாத், தீயவெங்கபடியாவிபுண்டமிர்தசீலமாமென்றுசெய்கை யா, லாயவஞ்சகிமனுளனைப்பொருதிடமபனைக்கொல்வனடுத்தெ னுத், தூயவன்சரணவணங்கிமுன்னமிதுசொற்றனன் றிகழ்சுசீ லனே. (௧௦௨)

அகமுருக்கமுறமயிர்சிலிர்ப்பவிழிநீரரும்பிவரவணுகுவேற், கிகலிநிற்பவளனீதியோவெனவியம்பிநற்கருணையேகிளுண், மகிழ் வுளத்திலுறவதனமுங்குளிரமதுர மென்சொலொடுமருவுமென், முகமெதிர்ப்படவுமவலமடிவினைகொலென்றுரைத்தன ணன்முதி தையே. (௧௦௩)

நிருபனுக்கெதிரமைச்சரெண்மரொனுமியோகருந்தமதுநீர்மையால்
வெருவமெய்ப்பகைஞரவரவர்க்குரியர்விறல்செகுத்திடவிளம்பினு
ரருகுநிற்குமவர்பிறருமங்கவரவர்க்குறும்பகையுமாண்மையும்
வரிசையிற்புகலவினவியுள்ளமிகமதிமனுளனுமகிழ்ந்தரோ.

நிருபகாதியர்வீரலாபச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௨௬௨.

## ௰அ - வது, விவேகன் காசிபுகுசருக்கம்.

மோகன்வெம்படையுமவனதாவியுமுடிந்ததாலினியெனுமொ ழிந், தேசுநம்படைஞர்வாரணசிபுகவென்றுவேலையொலியென்ன வே, யோகருஞ்சரமும்வேதவான்பரியு முற்றதத்துவமெய்யிரத முஞ், சோகமாறியமெய்ஞ்ஞானவீரரொடொலித்தெழுந்ததெவர் சொல்வரோ. (௧)

ஏகநாயகனைமானதன்பிரவிருத்தியானுதவுமீனரா
மோகனுதியர்பிணித்தவெம்பிணிவிடுப்பதற்கெழுமுயற்சியோர்
நாகபாசவிசிகத்தைவிட்டசுரனல்லறப்படையைநலியுநாள்
வேகமார்கனுழனுத்தியோகமெனவெத்திசாமுகமும்விரவினுர். ()

ஞானமாம்வலவனுடைத்துவனவேதவாசியினடக்குமோர்
தானலாதுயர்வுவேறிலாதனமருட்படைத்தொகுதிசாடியே
யானவைதிகநலயிதிபோவனவனந்தகோடிரவியாமெனச்
சேனையூடிலகுசோதிசேர்வனதிரண்டெழுந்தபலதேர்களே. (௩)

காமமென்கதலிசாய்த்துவெஞ்சினவனத்தைவேரொடுகளைந்தெறி
கேமுறுங்கடியலோபவோடையையிறைத்துழக்கியுலகியலெனு[ந
மாமதஞ்சிறித்ததன்முன்னுறினுமனம்பொறாமெதிர்மலைப்பதாய்க்
கோமகன்பணியின்முன்புசென்றுபடர்ஞானயானைபலகோடியே.

சிதைவின்மேலவர்கருத்துணர்ந்தனையர்செல்லவிட்டநெறி
சென்றுறாங,கதிவிடாதெவையுமாயநூறிமுழுஞானவாயினுளை
கக்கிவந், தெதிரும்வாதியரைவாயடக்கிமறையேழிசைக்குரலெழ
க்கலித், ததிருமவாசிகளெழுந்துசென்றனவனந்தகோடியெனலா
குமால். (௫)

ஆனவாழ்விலுமதற்றபோதினுமடுத்துயிர்க்கிறுதியாயினு
ஞானதீரமவழுவாதவிரமுநவிற்றுமின்சொலுமவின்றிடா [யும்
மோனவாளுமெயவைவெவரவர்க்கியையுமவ்வியற்றுறு முயற்சி
வானளாவவருமதிசயதிறலொண்ணில்கோடியுளர்வயவரே. (௬)

இனையதன்மையுறுநால்வகைப்படையுமேகும்வேலைதனிலினை
யதன், மனைவியாகுமுப்நிட்டைதமாதை வளர் நிதையோடுமெவண்
வைத்துமேற், றனையடர்ந்துநிருபகனையாதியர்கள் சூழநற்சுமதி
தன்னொடும், வினையகன்றறிவொர்வடிவமாமிரத மீதிலேறினன்
விவேகனே. (௭)

வேறு.

ஆயதோர்வேலைவாயறிஞர்கோன்வலியிலத்
தீயமாமோகனுதியர்படைத்திறமெலா
மோயுமாலினியெனுவ்வகையாலுலறியே
தூயமாதவருமயோகியருமுன்றுள்ளினார். (௮)

இகழும்வஞ்சகர்வினைக்கங்குல்வாயிதழ்குவித்
தகமொடுங்கியதகன்றிரதமேலறிவுடைப்
பகலவன்பகைதெறப்புகுதலும்பதுமமா
முகமலர்ந்தனளராமுடியில்வாழ்முதல்வியே. (௯)

